gistered No. M. 2330 "SIDDHANTHAM"
Vol. 39—No. 8



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

லர் 39 | பராபவ ஆவணி 1966 ஆகஸ்டு | இதழ் 8

உள்ளுறை



பத்திராசிரியர் : மூ. அருணாசலம், எம். ஏ.,
உதவிப் பத்திராசிரியர் : வித்துவான் அம்பை. இரா. சங்கரன்.

சைவ சித்தாந்த மகா சமாஜம்,
12, கிழக்கு மாடவீதி, மயிலாப்பூர், சென்னை-4.

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி 25 காசு

## சமாஜச் செயற்குழுக் கூட்ட அறிவிப்பு.

28—8—66 ஞாயிறன்று காலை 9-30 மணிக்கு சமாஜ அலுவலகத்தில் செயற்குழுக் கூட்டம் நிகழும். மாதக் கணக்கு சரிபார்த்தல், ஆண்டு விழாக் கூட்டம், சிறப்புக்கூட்டம் நடத்துதல் முதலிய பல பொருள்கள் பற்றிய முடிவுகள் தீர்மானிக்கப் பெறும். உறுப்பினர்கள் யாவரும் தவருது வருமாறு கேட்டுக்கொள்ளப் பெறுகிருர்கள்.

(செயலாளர்)

## சமாஜச் செய்திகள்

நம் சமாஜச் சார்பில் சுந்தரர் திருநாள் மயிலை கபாலீச்சுரத்தில் 25—7—66 திங்கள் மாலை 7 மணிக்கு நிகழ்ந்தது. சென்னைப் பச்சையப்பன் கல்லூரிப் பள்ளித் தலைமைத் தமிழாசிரியர் வித்துவான் திரு. அம்பை. இரா. சங்கரனர் அவர்கள் "சுந்தரர் செந்தமிழ்" என்னும் பொருள்பற்றி விரிவுரையாற்றினர்.

## ஆவணி மாத விசேட தினங்கள்

| | | |
|---|---|---|
| 7 | (23—8—66) | குலச்சிறை நாயனர் விழா |
| 9 | (25—8—66) | குங்கிலியக்கலய நாயனர் விழா |
| 26 | (11—9—66) | செருத்துணை நாயனர் விழா |
| 27 | (12—9—66) | புகழ்த்துணை நாயனர் விழா |
| ,, | ,, | அதிபத்த நாயனர் விழா |
| 28 | (13—9—66) | இளையான்குடி மாறநாயனர் விழா |
| 30 | (15—9—66) | மறைஞான சம்பந்தர் விழா |

## பிற செய்திகள்

### நால்வர் திருவிழா

திருச்சிற்றம்பலம் ஸ்ரீ நடனபுரீசுவரர் ஆலயத்தில் 25—7—66 ஆடி சுவாதி சுந்தரமூர்த்தி திருநாளில் நால்வர் திருவிழா சிறப்பாக நடைபெற்றது. திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர் கு. சுந்தரமூர்த்தி திருஞானசம்பந்தர் பற்றியும், சுந்தரமூர்த்தி பற்றியும், புலவர். பசுபதி அப்பர் பற்றியும் ஆசிரியர் அழகுதுரை மாணிக்கவாசகர் பற்றியும் சொற்பொழிவாற்றினர்கள். சுந்தரமூர்த்தி திருமுறைப் பாராயணம் நடைபெற்றது. சிறப்பான அலங்காரத்தோடு இரவு நால்வர் வீதியுலா நிகழ்ந்தது. காந்தி வித்தியாலய ஆசிரிய மாணக்கர் விழாவில் எல்லாப் பங்கும் கொண்டு அழகுற நடத்தினர்கள்.

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியையுள் நாடு.

| மலர் 39 | பராபவ ஆவணி 1966 ஆகஸ்டு | இதழ் 8 |
| --- | --- | --- |

## திருவாசகம் — கல்லாய் மனிதராய்

ஆசிரியர்

திருவாசகத்துக்குப் பொருள் கூறலாகாது என்ற ஒரு சம்பிரதாயம் சைவர்களிடையே உண்டு. திருவாசகத்துக்குப் பொருள் யாது என்று கேட்ட தில்லைவாழந்தணருக்கு, "பொருள் இப் பெருமானே", என்று மாணிக்கவாசகர் நடராஜப்பெருமானைச் சுட்டிக்காட்டிப் பெருமான் திருவடியில் கலந்துவிட்டார் என்பது வரலாறு. ஆதலின் என்றும் பக்தியோடு திருவாசகம் பயில்பவரும் பாராயணம் செய்பவரும், தெளிவாகப் பொருள் உணர்ந்து பயின்றால், பக்திமிகும் என்று எண்ணுகிறார்கள். இது இயல்பே. இதனாலேதான் பலர் இதுவரை திருவாசகத்திற்கு உரை எழுதி வந்திருக்கிறார்கள். எழுதினோர் பக்குவத்திற்கு ஏற்றபடி உரையின் சிறப்பு அமைந்திருக்கிறது.

இவ்வாறு எழுதப் புகுந்தோர் அனைவருமே சில இடங்களில் இடர்ப்பட்டிருக்கிறார்கள். அவ்வாறு இடர் தருகின்ற இடங்களில், சிவபுராணப் பகுதியில் வரும் கல்லாய் என்ற சொல் ஒன்று.

"புல்லாகிப் பூடாய் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்ல சுரராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்"

இங்கு மாணிக்கவாசகர் கூறுவது "எம்பெருமானே, புல்லாகியும், பூண்டுகளாகியும், புழுவாகியும், மரங்களாகியும், பலதிற மிருகங்களாகியும், பல்வகைப் பறவை, பாம்புகளாகியும், கல்லாகியும், மக்கள், பேய்கள், பூதக் கூட்டங்களாகியும், வலிய அசுரராகியும், தவத்தினரான முனிவராகியும், வானவராகியும் இவ்வாறு படைக்கப் பட்டுள்ள அசையாப் பொருள் அசையும் பொருள் ஆகிய இவற்றுள் யான் எல்லாப் பிறவியிலும் பிறந்து சோர்ந் தேன்" என்பது பொருளாகிறது. பல்விருகம் என்பதி லுள்ள பல் என்ற அடையை ஏனையவற்றோடும் கூட்டுக; விருகம்–மிருகம் என்பர். பூடு–பூண்டு; தூறு பெருத்த கோரை யொத்த களையினங்கள்; உள்ளிப்பூண்டு முத லாயின என்றும் ஒருவர் உரை எழுதியிருக்கிறார்! இங்குச் சொற்களைப் பொருள் செய்வதில் கடினம் இல்லை. ஆனால் கல் என்ற சொல் இவ்விடத்தில் வருவதன் பொருத் தமே விளங்காமலிருக்கிறது.

பிறப்புக்களின் வரிசையை, இது செய்யுள் ஆதலின், முறை பிறழ வைத்திருக்கிறார் என்பது பல பேராசிரியர் களின் கருத்து. அதாவது நிலையியற் பொருளாகியதாவரம் என்று கூறுமுன் கல்லைக் கூறி, பின்னர் முறையே புல், பூண்டு, மரம் கூறி, அவற்றின் பின்னர் புழு, பாம்பு, பறவை, மிருகம், மனிதர், பேய், பூதகணம். அசுரர், முனிவர் தேவர் என்று முறையை மாற்றிப் பொருள் செய்வதே பிறப்பின் வளர்ச்சி முறைக்குப் பொருந்துவது என்று ஆன்றோர் கருதுகின்றார்கள். கல், புல், பூடு, மரம் என்னும் நான்கும் நிலையியற் பொருள்கள் (தாவரம்). புழு முதல் தேவர் வரையுள்ள பத்தும் இயங் கியற் பொருள் (சங்கமம்) ஆகின்றன.

"தாவர வகையுள் முதல் நின்ற கல் என்பது கற்பாறை அல்லது மலை. இந்நிலவுலகில் புற்பூண்டுகளும் தோன்றுவதற்கு முன் எல்லா உயிர்களும் மலைகளின் அணுக்களிற் புலப்படாது கிடந்து பின் உடம்புகள் பெறுவதற்கு ஏற்ற தகுநிவந்த காலத்தே அவற்றினின்றும் முதலிற் புற்களாயும் அதன்பின் பூண்டுகளாயும், அதன் பின் மரங்களாயும் ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றுவன வாயின" என்பர் மறைமலையடிகள்.

கல்லுக்கும் உயிருண்டு என்பதை அனேக சான்றுகள் கொண்டு நிறுவப் பலர் முயன்று இருக்கின்றார்கள். "அகலிகை கல்லதானாள்" என்பது சிவஞான சித்தியார். கல்லுக்கு வளர்ச்சியுண்டு, ஆதலால் அதையும் உயிருள்ளதாகக் கொள்ளவேண்டும் என்று சிலர் கூறுவர். அன்றியும் ஜகதீஸ் சந்திரபோஸ் செய்த ஆராய்ச்சிகளால் கல்லையும் உயிர் உடையதாகக் கருதவேண்டும் என்று முடிவு செய்ய வேண்டும் என்பர். மேலும், இதற்குப் புராணக் கதையைத் துணை கொண்டாரும் உளர். மலைகள் உயிர் பெற்றுப் பறக்கும் தன்மை உடையனவாய் இருந்தன, இந்திரன் அவற்றின் சிறகை அரியவே அவை பறந்து செல்லும் நிலைமையை இழந்து ஒரு நிலையில் இருந்து விட்டன. மற்றும் அவை உயிர் பெற்றே இருக்கின்றன என்பது இவர்கள் கருத்து. இக்கருத்தை நாம் இங்கு ஆராய வேண்டியதில்லை. கல்லுக்கு உயிர் உண்டு என்று கொண்டு இவ்விடத்தில் பொருத்திப் பார்ப்பது பொருந்தாது.

இறைவன் எல்லாவிடத்திலும், உயிருடைய பொருள்களிடத்திலும், உயிரில்லாத பொருள்களிடத்திலும் எங்கும் நீக்கமற நிறைந்து உறைகின்றான் என்பது ஆன்றோர் கருத்து. ஆதலின் கல்லும் பிறவியே என்று கூறுவர். இதுபற்றித்தான் அகலிகைக்குக் கற்பிறவி வாய்த்தது; இராமனுடைய பாதஸ்பரிசத்தால் அகலிகை மீண்டும் பெண்ணானாள் என்பது. அவள் இடத்துத் திருவருள் பதிந்து அவள் கல் வடிவம் நீங்கி, மீண்டும் மனித வடிவம் பெற்றனள் என்பர்.

அசையாப் பொருளாகிய கல்லாய் இருந்து, பின்னர், திருவருள் வசத்தால் அறிவு விளங்குவதற்கு ஏற்ற தகுதி வந்த அளவிலேயே, உயிர்கள் புல், பூடு, மரம் ஆகிய தாவரமாக வளர்ந்து, அறிவு விளக்கம் பெறவே, இயங்கியற் பொருள்களில் ஈரறிவுயிர்களான புழுக்களாயும், மூவறிவுயிர்களான சிதல் எறும்புகளாயும், நாலறிவுயிர்களான நண்டு தும்பி முதலியவைகளாயும், ஐந்தறிவுயிர்களான பாம்பு பறவை மிருகங்களாகி, ஆறறிவுடைய மனிதர் அசுரர்களாகியும், ஆறறிவின் மேற்பட்ட முனிவர் தேவர்களாகியும் உயிர்கள் பிறவி எடுக்கும் என்பதையே மாணிக்கவாசகர் கூறினார் என்று உணர்க.

பலரும் எழுதியிருப்பது இக் கருத்து. இதற்கு ஆதாரம் "உள்ளது சிறத்தல்" என்ற டார்வின் கொள்கை. அதாவது ஓரறிவுயிரிலிருந்து முறையாக நிறையறிவு பெற்ற உயிர் வரையில் முறையான வளர்ச்சி ஏற்படுகிறது என்பது.

இக்கருத்துப் பொருந்தாது என்பது நவநீதகிருஷ்ண பாரதியார் எழுதிய உரையின் கருத்து. உயிர்கள் தாம் செய்த புண்ணிய பாவங்களுக்கு ஈடாகப் பிறவி எடுக்கின்றன. பிறவியால் உயர்ந்தது தாழ்ந்தது என்ற பாகுபாடின்றி, ஏறியும் இறங்கியும் மாறியும் வரும் என்பது சான்றோர் கொள்கை. இக்கொள்கை வேறு, உயிர்த் தோற்ற நூலார் கொள்கை வேறு. இவர்கள் கொள்கையே டார்வின் கொள்கை. இங்ஙனமாக, இக்கால ஆராய்ச்சிக்கு ஒத்தன கொள்ளுதலும், ஒவ்வாதன விடுத்தலும் அல்லது மாற்றுதலும் வேண்டும் என்று கருதுவது மாணிக்கவாசகரின் திருவாசகம் போன்ற அருள் நூலுக்குப் பொருந்தாது. இவ்வாராய்ச்சிக் கொள்கையை நாம் கொள்ளின், ஆராய்ச்சிக்குப் பொருந்தாத அநேக கொள்கைகள் அடிகள் வாக்கில் களைய நேரும்; ஆதலால் அக் கருத்தை விடுக்க என்கிறார் பாரதியார்.

இக்கருத்தைக் கொண்டு, புல்லாகி என்பது முதலுள்ள உயிர்களின் வைப்பு முறை இங்கு பிறழ்ந்திருக்கும் என்ற கருத்தை விலக்கி விடலாம்.

டி. கே. சிதம்பரநாத முதலியார் திருவாசகத்தில் மிகவும் ஈடுபட்டவர். பல பாடல்களைச் சொல்லிச் சொல்லிக் கேட்டோர் அனைவரும் பரவசம் அடையும்படிச் செய்திருக்கிறார். அவர் பேச்சை நேரில் கேட்டு அனுப வித்தவர்கள் இதை நன்குணர்வார்கள். இங்கே குறித்த வரிகளுக்கும் "கல்லாய்" என்ற சொல்லுக்கும் அவர் கூறும் பொருள் இங்குக் கருதத் தக்கது. மாணிக்கவாசகர் என்னென்ன பிறவிகள் எடுத்து இளைத்தார் என்பதைச் சொல்லுகிறார். புல், பூடு, புழு, மரமாயின அவ்வகைப் பட்ட பிறவிகள். மனிதப் பிறவியை அவர் பிறவி என்பதற்காகவே வெறுக்கவில்லை. இப்பிறவி, அவனை வாழ்த்தவும், அவனை நினைக்கவும், அவனுக்குப் பணிவிடை செய்யவும் பயன்படாது இருக்குமாயின், அந்த நிலையையே அவர் வெறுக்கிறார்; மற்றபடி பிறவிக்கு அவர் அஞ்சாத வர். "யானேதும் பிறப்பஞ்சேன் இறப்பதனுக்கு என் கடவேன்?" என்று பாடியவர் அல்லவா அவர்?

"மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநி-லத்தே" என்ற அப்பர் திருவாக்கும் இங்குக் கருதத் தக்கது.

ஆகவே, தாம் பிறந்து இளைத்ததாகக் கூறுகின்ற பிறவிகளை அவர் குறிப்பிடும்போது, மனிதப் பிறவியை அவர் ஓர் அடைகொடுத்தே கூறுகின்றார். மனிதப் பிறவி யில் இருவகை; ஒன்று வணங்கத் தலைவைத்து, வார்கழல் வாய் வாழ்த்த வைத்து இணங்கத்தன் சீரடியார் கூட்ட மும் வைத்திருக்கின்ற நிலையைக் கற்று உணர்ந்த பிறவி. மற்றொன்று இந்த நிலையைக் கல்லா மனிதப் பிறவி. மாணிக்கவாசகர் இங்கு அஞ்சுவது, தாம் பிறந்து இளைத்த தாகக் கூறுவது, இக் கல்லா மனிதப் பிறவியை; கற்ற பிறவியாய் இருப்பின் அப்பிறவி நேரே முத்தி கூடி இருக்கும். அதைக் குறிப்பிட்டுப் பிறந்திளைத்ததாகக் கூற நியாயமில்லை.

ஆகவே, சிவபுராணத்தில் வரும் தொடரானது "கல்லாய் மனிதராய்" என்பதில் முதற் சொல்லிலுள்ள

யகர ஒற்றின்றி "கல்லா மனிதராய்" என்று இருக்க வேண்டுமென்பது டி. கே. சி. அவர்களின் கருத்து. இங்கு இப்படி ஒரு கருத்து உண்டென்பதற்காகவே இதைக் குறிப்பிடுகின்றோம். இதன்படி பிறவிகளைக் குறித்துள்ள முறையில் வைப்பு முறை பிறழ்வு அதிகம் வராது.

ஆனால் ஒன்று; யாம் இருபதுக்கு மேற்பட்ட திருவாசக ஓலை ஏடுகளைச் சோதித்திருக்கின்றோம். ஒன்றில் கூட கல்லாய் என்பதில் யகர ஒற்று நீங்கிக் கல்லா என்று காணப்படவில்லை.

இதுகாறும் கூறியவற்றால், மேற்காட்டிய வரிகள் பற்றிய அறிஞர் கருத்து தெளிவாகிறது. பிறவிகள் வைப்புமுறை பிறழ்வு என்று கருதலாம்; கல் என்பதும் ஒரு பிறவியே; முறை பிறழ்வு இல்லை. மாணிக்கவாசகர் அருள்வாக்காகப் பாடியது, பிறவிகளின் மாறுதலை உள்ளபடி காட்டுவதாகும்; இதில் எந்தக் கிரமமும் இல்லை – என்பதாகும். துணிந்து எப்படியும் சொல்ல முடியவில்லை.



# ஸ்ரீ ருத்ரம்

(தி. கி. நாராயணசாமி நாயுடு)

வேதம், இருக்கு – எசுர் – சாமம் – அதர்வணம் என்று 4-ஆகவும், அதர்வணம் நீங்கலாக 3-ஆகவும் கொள்வது மரபு. சிவபெருமானது 108-ம் பெயர் அடைவில் வரும் திரயிமூர்த்தயே நம (44) என்பதில், வேதம் 3 என்று கொள்ளப்பட்டதுகாணலாம். * வேத புருடனுக்கு ருத்ரம் கண்; அதன் உள்ளிருக்கும் ஐந்து எழுத்து கண்மணி. † வேதங்கள் மேலானவை. அதைவிட ருத்ரமும், அதைவிட அதில் உள்ள ஐந்து எழுத்தும், அதைவிட அதில் அமைந்த

---

* சதுர்வேததாத்பரிய சங்கிரக விருத்தி.

† சிவதத்துவ விவேகம்; அப்பையதீட்சதர் பிரம்ம தர்க்காஸ்தவம்.

இரு எழுத்தும்(சிவ)மேலானது என்பர். வேதம் 3-என்ற மரபில், நடுவில் உள்ளது எசுர் வேதம். அதன் 7–காண்டங்களில் நடுக்காண்டமாகிய 4-ன் நடுவில், 11-வது பிரிவில், 6-வது சூக்தத்தில் விளங்குவது ருத்ரம். அதன் நடுவில் ஐந்து எழுத்தும், அதன் நடுவில் இரு எழுத்தும் அமைந்துளது. இதனையே அப்பர் வேத புருடனும் திருமால், சிவனை இதயத்தில் வைத்துப் போற்றுகின்றான் என்ற கருத்தில் ''விண்ணகத்தான், மிக்க வேதத்துளான் திருமால் அகத்தான்'' (4–112–6 தனித் திருவிருத்தம்); 'பையஞ்சுடர் விடு நாகப்பள்ளிகொள்வான் உள்ளத்தானும்' (4–4–10) என்று அருளினார்கள். தேவார அடங்கன் முறையில் நடுவில் உள்ளது அப்பர் தேவாரம். அதன் நடுவில் இருப்பது திருக்குறுந்தொகைத் திருமுறை. அதில் 51 ஆம் திருப்பாலைத்துறைப் பதிகத்தில், 6 ஆம் திருப்பாட்டில் 'சிவாய' வருவது காணலாம்.

ருத்ரம் உயிர்ப்பொருள், உயிர் இல்லாத பொருள் எல்லாவற்றையும், தனித்தனி எடுத்துக்கூறி, அவை அனைத்திலும் கலந்து விளங்கும் சிவனுக்கு வணக்கம்கூறுகிறது. தன் இயல்பில் ஒருவனாய் நிற்கின்ற இறைவன், உலகை நோக்கி நிற்கும் பொதுஇயல்பில் தானும் தனது சக்தியும் என இருதிறப்பட்டு, உலகெலாமாகி நிற்கும் போது, உலகத்தொடு கலப்பினால் அவையேயாய், பொருள் தன்மையால் அவை ஆகாது தானேயாய், எங்கும் தானுமாய் நிற்பன். இவை முறையே 'ஒன்றாய், வேறாய், உடனாய்நிற்றல்' எனப்படும். இறைவன் பொருளால் உலகத்தின் வேறு; ஆயினும், உடலில் உயிர்போல அவற்றோடு சிறிதும் வேற்றுமை இன்றிக் கலந்து நிற்கும் கலப்பினால் உலகமே ஆகியும், அப்படிச் சிறிதும் வேற்றுமை இன்றி ஒன்றாய்க் கலந்து நின்றாலும், பொருளால் தான் உலகத்தின் வேறே ஆகியும், இயங்கும் தன்மை உடைய உலகத்தை இயக்குதலோடு நிற்காது. இயங்கியும் வருதலின், உடனாகியும் நிற்றலாம். இப்படிஒன்றும், வேறும், உடனும் என்னும் மூன்றிற்கும் பொதுவாய் நிற்கும் நிலையே 'அத்துவிதநிலை' எனப்படுகின்றது. இந்தமூன்று நிலைகளுள் ஒன்றுதல், உலகத்தின் இயக்கத்திற்கு முதல்

ஆவது; ஆகலின், அதனையே பலரும் பல படியாக், பல இடத்தும் சிறந்து எடுத்து ஓதுவர். ஒன்றாய் நிற்கும் நிலையை விளக்குவதே §நின்ற திருத்தாண்டகமும் ஸ்ரீருத்ரமும் ஆம்.

ஞானத்தின் முடிந்த நிலை ருத்ரத்தில் பெறப்படுவதால், அதனை 'மறைப்பயன் ஆகிய ருத்ரம்' (1037) என்றார் சேக்கிழார். வேதங்கள், மந்திரம்-பிராம்மணம்-உபநிடதம் என்ற 3 பிரிவுகளை உடையது. மந்திரம், கருதுவதை அடைவதற்குச் செய்யும் யாகம் முதலியவற்றிற்குப் பயன்படுவது. பிராம்மணம், யாகத்திற்கு உரிய சடங்குகளை வகுப்பது. உபநிடதங்கள் இறைவனது இலக்கணங்களை எடுத்துச்சொல்வன. கணிப்பால் எல்லாத் தேவதைகளும் நிறைவுபெறுகின்றனர். இம்மூன்றையும் ருத்ரம் நிறைவு செய்கிறது.

இது ஸ்ரீருத்ர ப்ரச்னம், ஸ்ரீருத்ர சூக்தம், ஸ்ரீருத்ராநுவாகம் என வழங்கும். இதில் உள்ள 'திரு' (ஸ்ரீ)வுக்கு உமை, பேறு, ஒளி என்பன பொருளாம். இவை மூன்றும் சிவனிடம் ஒன்றுகூடி இருத்தலின் அவர் ஸ்ரீருத்ரன் எனப்பட்டார். ருத்-துன்பம்; திரன்-நீக்குபவன், ஓட்டுபவன்.

'உருத்திரனை' உமாபதியை, உலகுஆனானை,
உத்தமனை நித்திலத்தை, ஒருவன் தன்னை—
பருப்பதத்தை, பஞ்சவடி மார்பினானை,
பகலிரவாய் நீர்வெளியாய் பரந்துநின்ற—
நெருப்புஅதனை, நித்திலத்தின் தொத்து ஒப்பானை,
நீறு அணிந்த மேனியராய், நினைவார் சிந்தைக்—
கருத்துஅவனை, கஞ்சனூர் ஆண்டகோவை,
கற்பகத்தை, கண்ணாரக்கண்டு உய்ந்தேனே. 6-90-5.

---

§ 'இருநிலனாய், தீஆகி. நீரும் ஆகி' என்ற திருத்தாண்டகம்.

இன்னல்அங் கடலுள் பட்டோர் யாரையும் எடுக்கும் நீரால்
உன்னரும் பரம மூர்த்தி உருத்திரன் எனும்பேர் பெற்ருன்.

—கந்தபுராணம் - ததிசிப் - 46.

இடும்பைநோய் என்பதுஓட்டும் இயல்பின் உருத்திரன்.

—காஞ்சிப்புராணம்-பரசிராமேச்சரம்-44.

ருத்ரன், அழுதல் (ரோதனம்) செய்தவன் என்ற பொருளில் அக்கினியையே குறிக்கும் என்பது கந்தபுராணத்தில் அதே இடத்தில் தெளியக் கூறப்பட்டுள்ளது.

தொண்டரைத் துன்பப் பிறவிக் கடலினின்று எடுத்து இன்பக் கரையில் ஏற்றுவதனுல் சிவனுக்கு அப் பெயர்வந்தது. சிவ குமாரர்கள், அவனடி அடைந்தோர். அவன் கணங்கள், அவன் உருவம் பெற்ருேர் அனைவர்க்கும் அவன் சார்புபற்றி அப்பெயர் வழங்கும். அவன் வடிவங்கள் அனைத்தும் கோர சாந்த வடிவங்கள் 2-ல் அடங்கும். முறுகிய (கோர) வடிவம், பிறவிப் பெரும் பிணிக்கு மருந்து; அமைதி (சாந்த) வடிவம், சிவத்துவ விளக்கம் தருவது. இவை முறையே ருத்ரம் நமக, சமக மந்திரங்களால் போற்றப்படுவது. ருத்ரம் 11 *அநுவாங்களை உடையது. இந்த உட்பிரிவுகளில் ருக்கு, எசுசு மந்திரங்கள் அமைந்துள்ளன. முதல் உட்பிரிவில் 15 ருக்கும், 2 முதல் 9 வரையுள்ள 8 உட்பிரிவுகளில் முறையே 13, 17, 17, 15, 15, 16, 17, 19 எசுசும் 10-ல் 12 ருக்கும், 11-ல் 10 ருக்கும் 3 எசுசும் ஆக ருக்கு 37-ம், எசுசு 132-ம் ஆக மந்திரங்கள் 169 உள்ளன. இவைகளை முறையாக ஓதும்முறை, தியானம், பயன் பிற எல்லாம் ருத்ர கற்பத்திலும், மற்றகற்ப சூத்திரங்களிலும் விரிவாகக் காணலாம். தைத்திரிய சம்ஹிதையில் தலைசிறந்த பகுதியாகக் கருதப்படும் இது, அன்ருட பூசையில், செபத்தில், ஓமத்தில் தொன்றுதொட்டுச் சிறப்பாக ஓதப்பட்டு வருகிறது.

---

* ஒரு பொருளைத் தொடர்ந்து முடிக்கும் உட்பிரிவு

இது நாளும் ஓதவேண்டியவைகளில் சிறந்தது. திருப்பித் திருப்பி உரு ஏற்ற உரியது. பிறவிக்கடலின் தளைகளை நீக்கி, பேரின்பம் அடைய சாதனமாய் அமைவதால் இது, 'ருத்திர உபநிடதம்' ஆகிறது. எசுர்வேத சாகை 101-லும், வேறு பல வடிவங்களில் ருத்ரன் போற்றப்படுவதாலும், இது 'சத ருத்ரியம்' எனப்பட்டது. இருமல (பிரளயா கலர்) ஆன்மாக்கள் மலபரிபாகம் எய்திப், பெருமானால் நிராதிகரணமாகத் தீக்கை செய்யப்பெற்று, முத்தராகி, பல்லாயிரங்கணங்களுடன் கூடிய 118 ருத்ரருள், நிவிர்த்தி கலையின் பிருதிவி-தத்துவஅண்டங்கள் ஆயிரங்கோடியினும் அமைந்த 108 புவனங்களுள், புறத்தே கிழக்கு முதலிய 10 திசையினும் ஒவ்வொரு திசைக்கும் பதின்மராக வைகும் புவனபதிகளாகிய ருத்ரர் நூற்றுவர்க்கும், அவர் கணங்கட்கும் வணக்கம் கூறி, இவர் அனைவரையும் பரிசனங்களாகவுடைய முழுமுதலாய்ச் சாந்தி அதீத கலாபுவனந்தம் முழுதும் யாவையும் இறுதியுறச் சங்கரிக்கும் மகாருத்ரனாகிய சிவனுக்கு வணக்கம் கூறி, பிறவிப் பெரும் பிணித் துன்ப வெள்ளக் கடல் நீந்துங்கருத்தே மிக்குச் சாந்தி வேண்டிக் கோடலின் இது சத ருத்ரியம் எனவும் பெயர் பெறும். இதனைப் பவுட்கர ஆகம விருத்தியில் பசு படலத்தின் அத்துவப் பிரகரணத்திற் காண்க. "தைத்திரிய சாகையின் ருத்ரப்பிரசின முடிவிலே, அந்த அந்தத் திக்கில் இருப்போராகிய இந்தருத்ரர்கள், பத்துப்பத்தான எண்ணிக்கையோடும் வணக்கத்தோடும் சுருக்கமாகக் குறிக்கப்பட்டனர்" என அப்பிரகரணமுடிவில் கூறியதும் இங்கே சிந்திக்கவும். இதன் கணிப்பால் எல்லாத் தேவதைகளும் நிறைவு பெறுகின்றன இதன் செபம் தீவினைகளுக்குச் சிறந்த கழுவாயாக விதிக்கப்பட்டுள்ளது. ஆகையினால் யார் எப்பயன் கருதியும் இதை ஓதிக் கைவரப் பெறலாம்.

சிவனை வணக்கம் (நம : நம :) என்று வணங்கி வழிபட்டவனை, எல்லா நன்மைகளும் எளிவந்து வணங்கி நிற்கும் என்ற தைத்திரிய உபநிடதக் கருத்துப்படி ருத்ரம் அமைந்திருப்பதால், இது சிறந்த சாதனம் ஆகிறது. பேர் அண்டம் முழுதும் பரவிய உடல், பால்வெண்ணீற்றின் ஒளி, அரவு அணிகலம், கருத்தமிடறு, இளம்பிறை' சடைமுடி, வில் ஏந்திய கை, முக்கண், அக்கமாலை இவற்

றுடன் கூடிய வடிவத்தில் இறைவனை அழுந்தி நினைந்து ருத்ரத்தால் போற்றினால் எல்லா நன்மைகளும் கைகூடும் என்பர். அவர் அனைத்திற்கும் முதல்; பிறவிப்பிணிக்கு மருத்துவர்; அடியவர் குற்றம் களைந்து குணத்தைக் கோதாட்டும் மலை; அவரே நாள்தோறும் நாம் காணும் ஞாயிருகத் தோன்றுகிறார். அவர் கொள்ளும் வடிவங்கள் எண் அற்றவை. உலகில் காண்பது எல்லாம் அவர் வடிவே ஆம். கள்வர் உள்ளிட்டவர்களுடைய உடல்களில் கூட அவர் உயிர் வடிவாகவும், இறைவடிவாகவும் இருக்கிறார். இப்படிக்கருதி வழிபடுவதால் உலகத்தீமைகளை வெல்ல முடியும். அமர்ந்தவராக, கிடப்பவராக, துயில்பவராக, விழித்தவராக, நின்றவராக, விரைபவராக, குழுமியுள்ளவராக, தலைவராக தச்சராக, குயவராக, வேடராக, வலைஞராக எல்லாமாக அவர் இருக்கிறார். துரும்புதுரும்பு அன்று. கையாளப்படாத்தும்பை, எருக்கு, ஊமத்தை மலர்களும் அவரை வழிபடப் பயன்படுகின்றன.

ருத்ரத்தின் முதல் உட்பிரிவில், அவர் கட்டளையை மீறியவர்களைச் சினந்த அவரை, நேர்பட வேண்டுதலும், 2 முதல் 9 ஆம் உட்பிரிவுவரை எல்லாக் கடவுள், உடல், உள்ளுறைத் தன்மைகளையும் குறிக்கும் பெயர்களால் வணக்கமும், 10-ல் நேர்பட்ட இறைவனிடம் கருதியதை அடையவும் வேண்டாதன அகலவும் விண்ணப்பித்தலும் 11–ல் ருத்ர கணங்களுக்கு வணக்கமும் கூறப்படுகின்றன. இதற்கு சாயனாசாரியர், அபிநவசங்கரர், பட்டபாஸ்கரர் விஷ்ணுசூரி ஆகிய நால்வரது பேருரைகள் உண்டு.

ருத்ர மனப்பாடம், சமக மனப்பாடத்துடன் கூடியே நிறைந்த பலனைத்தருகிறது என்பர். இதனை ஓதும்முறை 5 வகையாகக் கூறப்படும்: (1) ருத்ரத்தையும் அதன் பின் சமகத்தையும் ஓதுவது. இது எளியமுறை (2) ஒரு முறை ருத்ரம்முழுவதும் சொல்லி, பின் சமகத்தின் முதல் பிரிவையும் இரண்டாம்முறை அப்படி ருத்ரம் சொல்லி சமகத்தின் இரண்டாம் உட்பிரிவையும், இப்படியே 11–வது முறையாக ருத்ரம் ஓதி, சமகத்தின் 11-வது உட்பிரிவை ஓதி, முடித்தல். இது 'ருத்ரைகாதசனி' எனப்படும்.

(3) 11 ருத்ரைகாதசனீ கொண்டது, ஒரு லகு ருத்ரம்.

(4) 11-லகுருத்ரம், ஒரு மகா ருத்ரம். (5) 11-மகா ருத்ரம், ஒரு அதிருத்ரம்.

திருமஞ்சனம் முதலிய சிறப்புக் காலங்களில் ருத்ரம் முழுவதும் ஓத போதுமான காலம் இல்லாதபோது, ஐந்து எழுத்தைத் தன்னுள் கொண்ட 8-ஆவது உட்பிரிவை மட்டும் சொல்வது மரபு. முதல் உட்பிரிவில் உள்ள 15 மந்திரங்கள் 16 வகை (சோடச) உபசாரம் கொண்ட பூசைக்கும், அடுத்த 8 உட்பிரிவுகள் அர்ச்சனைக்கும், இறுதி இரு உட்பிரிவுகள்விண்ணப்பத்திற்கும் ஓதப்பட்டுவருகின்றன. பிரதோடத்தன்று சிறந்தபலன் அடைய ருத்ர திரிசதி'யால் பெருமானை அர்ச்சனை செய்தல் மரபு.

சிவஞான போதம் 12 ஆம் சூத்திரம் 3 ஆம் அதிகரண சிற்றுரையிலும் பேருரையிலும்—'மெய் உணர்வு உடையார்க்கு, பகுப்பின்றி எங்கணும் பரமேசுரன் எனக் காண்டலே பொருத்தம் உடைமையானும், நின்றதிருத்தாண்டகம் முதலியவற்றுள் அவ்வாறு ஓதலானும், திருஉருத்திரத்துள் பகுப்பின்றி உயிர்ப்பொருள், உயிரில் பொருள் எல்லாவற்றையுந் தனித் தனி எடுத்து ஓதி வழிபாடு கூறுதலானும்...மேலும் சிற்றுரையில் மட்டும்...என்றும், எப்பொருள் கண்ணும் இறைவன் கலந்துளன் என்பது தெளிந்து கோடல் பொருட்டு திருஉருத்ரத்தில் அவ்வாறு ஓதப்பட்டது எனக்கொள்க' என்று சிவஞான சுவாமிகள் அருளியது காண்க.

# திருமூலரும், திருஞானசம்பந்தரும்

(குடந்தை. சைவத்திரு. மா. வள்ளியம்மையார்)

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே.

அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவராகிய திருமூலரைப் பற்றி 'நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்' என்று கூறினர் சுந்தரர்.

'மாதவம் செய்த தென்திசை வாழ்ந்திட' வந்து அவதாரம் செய்த சுந்தரமூர்த்தி சுவாமிகள் வேதநெறி தழைத்தோங்க மிகு சைவத்துறை விளங்கப் பூத பரம்பரை பொலியப் புனிதவாய் மலர்ந்தழுத சீத வள வயற்புகலித் திருஞான சம்பந்தரை 'எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன் என்றூர்.

பிரான் பெருமை பெற்ற இரு நாயன்மார்களின் சரிதையை என் சிற்றறிவுக்கு எட்டியவாறு, இறைவன் துணை கொண்டு 'திருமூலரும், திருஞானசம்பந்தரும்' எனும் தலைப்போடு தொடங்குகிறேன்.

கயிலை மால் வரையைக் காத்தருளும் நாயகர் நந்தி தேவரின் திருவருள்பெற்ற யோகிகளுள் ஒருவர் திருமூலர். அவர் அணிமாதி சித்தி பெற்றவர்; பொதிய மலையிலிருந்த தம் நண்பர் குறுமுனிவரோடு சில நாள் உடனுறைய விரும்பிப் புறப்பட்டுக் கேதாரம், பசுபதிநேபாளம், காசி, பருப்பதம், காளத்தி, திருவாலங்காடு, காஞ்சி, திருவதிகை, தில்லை முதலிய தலங்களைத் தரிசித்துத் திருவாவடுதுறைக்கு வந்து சிவதரிசனம் செய்து புறப்பட்டுச் சாத்தனூர் எனும் ஊருக்கு அருகில் வரும்போது அங்கு பசுக்கள் மேய்ந்து கொண்டிருக்கும் இடத்தில் அவைகளைமேய்க்கும் இடையன் இறந்து கிடப்பதையும், அவனைச் சுற்றிப் பசுக்கள் கண்ணீர் விட்டுப் புலம்பி நிற்பதையும் கண்டார்.

இந்த இடையன் உயிர் பெற்று எழுந்தாலொழிய இப் பசுக்களின் துயரம் நீங்காதென உணர்ந்த இக்கருணையாளர் தமது உடலை ஒருபுறம் சேமித்து வைத்துத் தம் உயிரை இறந்து கிடந்த மூலன் எனும் பெயருடைய அந்த இடையன் உடலில் அடைவித்து மூலனாய் உயிர்பெற்றெழுந்தார். இடையன் எழுந்ததைக் கண்ட பசுக்கள், அவனை நாவினால் நக்கி முகர்ந்து, அணைந்து, கனைப்போடு நயந்து, களிப்பினால் துள்ளித் துயரம் நீங்கின. மாலைப் பொழுது வந்ததும் அப் பசுக்கள் தத்தம் இல்லங்களுள் தாமே நுழைந்தன.

மூலனும் இவர் காலந்தாழ்த்தி நிற்பதைக் கண்ட இவர் மனைவி இவருக்கு ஏதோ ஈனம் அடுத்தது போலும் என நினைந்து இவரை அழைக்க 'எனக்கு உன்னுடன் யாதொரு தொடர்பும் இல்லை' என இவர் கூறிப் பொது மடம் ஒன்றிற் புகுந்தார். மறுநாள் பலர் வந்து இவரை அழைத்தும் பயனின்றிப் போகவே 'இவருக்கு ஞான உணர்வு வந்து விட்டது. இவர் இனி வரமாட்டார்' எனக்கூறி மூலனின் மனையாளை அவர்கள் அழைத்துச் சென்றனர். பிறகு திருமூலர் தமது பழைய உடலைத் தேடினார். அது காணப்படவில்லை. 'ஆகமப் பொருளைத் தமிழில் வகுக்க வேண்டி இறைவன் உடலை மறைப்பித்தார்' எனத் தமது ஞான உணர்வால் இவர் தேர்ந்து திருவாவடுதுறையை அடைந்து ஓர் அரசமரத்தின் கீழ்ச்சிவயோகத்தில் அமர்ந்து, ஆண்டுக்கு ஒரு பாடலாகச் சைவாகமங்களில் உணர்த்தப்பட்ட ஞானம், யோகம், கிரியை, சரியை என்னும் நிலைகளை விளக்கும் மூவாயிரம் பாடல்களைத் தெள்ளு தீந்தமிழில் உலகோர் உய்யும்படிப் பாடி, மூவாயிரம் ஆண்டு இப்புவியில் மகிழ்ந்திருந்து கயிலையிற் சிவன்தாள் அடைந்தார்.

### திருமந்திரம்—பாயிரம் 74 ஆம் பாடல்.

செப்புஞ் சிவாகமம் என்னும் அப் பேர்பெற்றும்
அப்படி நல்கும் அருள் நந்தி தாள்பெற்றுத்
தப்பிலா மன்றில் தனிக்கூத்துக் கண்டபின்
ஒப்பில் எழுகோடி யுகம்இருந் தேனே.

SAIVA SIDDHANTHA MAHA SAMAJAM, MADRAS—LIST OF LIFE MEMBERS—(Contd.)

2055 T. S. Palanivelu;
158, Coral Merchant Street,
G. T. Madras-1

4895 Dr. K. Rangaswamy,
Mayura Clinic,
Muruga Pillay Street,
Chidambaram, S. A. Dt.

4896 Dr. M. Natarajan,
1/3, Landons Road,
Madras-10

4909 V. Maruthavaṇam Pillay,
Pinnalur P. O.,
(via) Sethiathope,
Chidambaram Tq., S. A. Dt.

4935 A. Muthukumarasamy
Mudaliar,
4, Pudupet North Street,
Chidambaram, S. A. Dt.

4936 A. Natesa Mudaliar,
37/38, Pudupet North Street,
Chidambaram, S. A. Dt.

4950 R. Ramalingam Pillay,
Orathur Village & P. O.
Chidambaram, S. A. Dt.

2838 S. Sivakumaran,
2, Srinivasa Avenue,
Madras-28

5021 Srimathi Radha Thyagarajan,
"Meenakshi Nilayam",
Thirupparankunram Road,
Madurai-3

5094 K. Navaratnam,
Sivathondan Sanga Amaichar,
"Thiruvadi",
113, Columbuthurai Street,
Jaffna, Ceylon

MALAYSIA

3160 N. R. Karuppiah,
Telecoms Dept.,
Penang, Malaysia

4837 A. Sundaram,
21, Green Lane, Seremban,
Malaysia

3165 K. Kumaraswamy,
F. R. I., Kepong,
Selangor, Malaysia

4838 Swami Pranavananda,
11, Kampong Atap Road,
Kuala Lumpur, Malaysia

3666 S S. Maniam, 34, Jalan,
Lakshmana (Reverside),
Malacca, Malaysia

3158 K. Nalliah, Telecoms Dept.,
Batu Pahat, Johore, Malaysia

3172 V. Sundram,
5-A, Jalan Kumaraswamy off
Ipoh Road, Kuala Lumpur,
Malaysia

5024 M. K. Muthuramalingam
Pillai,
283-A, Convent Road,
Taiping, Malaysia

5025 V. S. Senathiraja,
Health inspector,
Taiping, Malaysia

5026 K. Mailvaganam,
Parsal Clerk, Railway,
Taiping, Malaysia

5027 D. MG. Sham Sehal,
88, Main Road,
Taiping, Malaysia

5028 N. Vaithilingam,
Indian Welfare Children
Home, Upper Station Road,
Taiping, Malaysia

5029 C Arunasalam,
1-A, Greagh Road,
Assam Kumbang,
Taiping, Malaysia

5030 Miss. M. Velammal,
236, Aulong, Taiping,
Malaysia

5031 Mrs. Rukmany Krushnasamy,
148, Kampong Boyan Lane,
Taiping, Malaysia

5032 Mrs. Leeladevi Theyventheran,
Convent Tamil School,
Convent Road, Taiping,
Malaysia

5033 Mrs. Yasothai Shunmugavelu,
151, Thomson Road,
Taiping, Malaysia

5034 S. Vengadesan,
27, Low Road, Kuala Kangsar,
Perak, Malaysia

5035 A. Neela Pillay,
20, Green Lane,
Seramban, N. S., Malaysia

5036 N. K. M. SP. Valliappa
Chettiar, 97-2, Jalan Rahmat,
Batu Pahat, Malaysia

5037 N. N. P. N. Panchanatham
Chettiar,
97-1, Jalan Rahmat,
Batu Pahat, Malaysia

5038 N. Viknathasan,
84, Jalan Dagang,
Batu Pahat, Johore, Malaysia

5039 M. Thananayagam,
Post Office, Batu Pahat,
Johore, Malaysia

5040 K. Chelliah, Tech. Asst.,
Survey Dept.,
Johore Bahru, Malaysia

5041 A. Samy, Telecoms Dept.,
Johore Bahru, Malaysia .

5042 T. Selvarajah,
Telecoms Dept., Batu Pahat,
Johore, Malaysia

5043 V. Thuraisamy,
V. F. 5-B, Norwich Road,
Collage Park, Marry Land,
U. S. A

3662 Sivaneyan,
163, Jalan Bander,
Kuala Lumpur, Malaysia

5044 Mrs. Vaithilingam
Sellamuthu,
Veerapathira Koviladi,
Kuppilan, Chunnakam Post,
Ceylon

5045 Mrs. Kanagaretnam
Sivapakiam (Teacher),
Kuppilan, Chunnakam Post,
Ceylon

5046 S. Sivasambunathan, B. Sc.,
Teacher, Velanthoppu,
Kaddapiray,
Jaffna, Ceylon

"சிவபெருமானே தமது வழிபடு கடவுள்" என்பதற்கு இவர் பாடிய திருமந்திரங்களில் பல சான்றுகள் கிடைக்கின்றன.

(திருமந்திரம் — பாயிரம் 9 ஆம் பாடல்)

பொன்னாற் புரிந்திட்ட பொற்சடை யென்னப்
பின்னாற் பிறங்க இருந்தவன் பேர்நந்தி
என்னால் தொழப்படும் எம்இறை மற்றவன்
தன்னால் தொழப்படு வாரில்லை தானே. என்றும்,

(5 ஆம் பாடல்)

"சிவனொடொக் குந்தெய்வம் தேடினும் இல்லை"

என்றும், (43 ஆம் பாடல்)

"அரனடி சொல்லி அரற்றி அழுது" என்றும்,

(46 ஆம் பாடல்)

"அந்தி வண்ணா அரனே சிவனே"

என்றும் இவ்வாறு பல இடங்களில் காணலாம்.

நம்முடைய பிறவிப் பெருங்கடலை நீந்தவும் பேரின்பப் பெருவாழ்வை அடையவும் திருமந்திரம் ஒரு பெரும் தோணியாக விளங்குகிறது என்பதை எண்ணி வழிபடுவோம். பெரியபுராணம் திருமூலரின் பெருமைகளைப்பற்றிப் பலபடப் பேசுகின்றது.

இதனைப்போன்றே திருஞானசம்பந்தர் பெருமையையும் சிறிது நோக்குவோம்.

திருஞானசம்பந்த சுவாமிகள் சோழ நாட்டினில் பன்னிரு திரு நாமங்களோடு திகழ்கின்ற சீர்காழிப் பதியில் அந்தணர் மரபில் கௌணியர் கோத்திரத்தில் சிவபாத விருதயரும், பகவதி அம்மையாரும் செய்த நற்றவத்தால் உலகத்தில் ஆன்மாக்கள் சிவஞானம் பெற்றுய்ய ஒரு ஆதிரை நன்னாளில் திரு அவதாரம் செய்து அருளினர். திருஞான சம்பந்தர் திரு அவதாரம் செய்த பெருமையைச் சேக்கிழார்,

அவம்பெருக்கும் புல்லறிவின் அமண்முதலாம் பரசமயப்
பவம்பெருக்கும் புரைநெறிகள் பாழ்பட நல் லூழிதொறும்
தவம்பெருக்குஞ் சண்பையிலே தாவில்சரா
சரங்களெல்லாம்
சிவம்பெருக்கும் பிள்ளையார் திரு அவதா ரஞ்செய்தார்.

(திருஞானசம்பந்தர் புராணம்—26 ஆம் பாடல்)

எனக் கூறியுள்ளார். இன்னும் அவர் செய்த அற்புதங்கள் சிலவற்றைப் பார்த்து மேலே செல்வோம்.

புனலில் ஏடெதிர் செல்லெனச் செல்லுமே;
புத்தனார் தலை தத்தெனத் தத்துமே;
கனலில் ஏடிடப் பச்சென்றி ருக்குமே;
கதவு மாமறைக் காட்டில் அடைக்குமே;
பனையில் ஆண்பனை பெண்பனை ஆக்குமே;
பழைய என்புபொற் பாவைய தாக்குமே;
சினவ ராவிடம் தீரெனத் தீருமே;
செய்ய சம்பந்தர் செந்தமிழ்ப் பாடலே.

இன்னும் எவ்வளவோ அற்புதங்களை அவர் புராணம் பேசுகிறது. அவற்றில் சிலவற்றினை அடியேன் கூற விழைகின்றேன்.

(தி. பு. பாடல்—45)

வருமுறைமைப் பருவத்தில் வளர்புகலிப் பிள்ளையார்
அருமறைகள் தலைஎடுப்ப ஆண்டதிரு முடிஎடுத்துப்
பெருமழுவர் தொண்டல்லால் பிறிதிலசயோம்
என்பார்போல்
திருமுகமண் டலமசையச் செங்கீரை ஆடினார்.

என ஒரு வயதில் அவர் செய்த அற்புதத்தைச் சேக்கிழார் கூறுகிறார்.

(46 ஆம் பாடல்)

"நாமறியோம் பரசமயம் உலகீர்! எதிர் நாடாது
போமகல" என்றங்கை தட்டுவதும் புனிதன்பால்
காமருதா ளம்பெறுதற் கொத்துவதுங் காட்டுவபோல்
தாமரைச்செங் கைகளினாற் சப்பாணி கொட்டினார்,

திருஞானசம்பந்தர் மதுரையில் சமணரிடம் வெற்றி பெற்றுச் சைவசமயத்தை நிலைநாட்டுவதையும், திருக்கோலக் காவில் ஈசன் அருளினால் பொற்றாளம் பெறுவதையும் சேக்கிழார் இப் பாடலில் விளக்குகின்றார்.

மற்றுமோர் தெய்வந் தன்னை உண்டென
நினைத்தெம் பெம்மாற்
கற்றிலா தவரைக் கண்டால் அம்மநாம்
அஞ்சு மாறே.

எனத் திருவாசகம் அச்சப் பத்திலும்,

எங்கை உனக்கல்லா தெப்பணியுஞ் செய்யற்க

எனத் திருவெம்பாவையிலும் மாணிக்கவாசகர் கூறுகிறார்.

இனி அவர் மூன்று வயதில் செய்த அற்புதத்தைச் சேக்கிழார் பெரியபுராணம் 54 ஆம் பாடலில் கூறுகிறார்.

நாவாண்ட பலகலையும் நாமகளும் நலஞ் சிறப்பப்
பூவாண்ட திருமகளும் புண்ணியமும் பொலிவெய்தச்
சேவாண்ட கொடியவர்தஞ் சிரபுரத்துச் சிறுவருக்கு
மூவாண்டில் உலகுய்ய நிகழ்ந்ததனை மொழிகின்றேன்.

எனத் தொடங்குகிறார்.

குழந்தை, செல்வமாக வளர்ந்து மூன்றாண்டுகள் எய்தியது. ஒருநாள் தந்தையார் நீராடும் பொருட்டுத் திருக் குளத்துக்குச் செல்லுங்கால் குழந்தையும் உடன்வருவதாக அழ, தந்தையார் குழந்தையை அழைத்துச் சென்று குளக் கரையில் இருத்தி குளத்தில் இறங்கி நீராடினார்.

அப்போது தம் தந்தையாரைக் காணாத குழந்தை நாற்றிசையும்நோக்கி அழுது கடைசியாகத் தோணியப்பரின் திருக்கோயிலில் சிகரம்நோக்கி 'அம்மே அப்பா' என அழத் தொடங்கியதை, சேக்கிழார் பெரிய புராணம் 62 ஆம் பாடலில் அழகுற எடுத்துக் கூறியுள்ளார்.

கண்மலர்கள் நீர்ததும்பக் கைம்மலர்க ளாற்பிசைந்து
வண்ணமலர்ச் செங்கனிவாய் மணிஅதரம் புடைதுடைப்ப
எண்ணில்மறை ஒலிபெருக எவ்வுயிருங் குதுகலிப்பப்
புண்ணியக்கன் றனையவர்தாம் பொருமிஅழு தருளினார்.

## (63 ஆம் பாடல்)

மெய்ம்மேற்கண் துளிபனிப்ப வேறெங்கும் பார்த்தழுவார்
தம்மேலைச் சார்புணர்ந்தோ? சாரும்பிள் ளைமைதானோ?
செம்மேனி வெண்ணீற்றார் திருத்தோணிச் சிகரம்பார்த்(து)
''அம்மே! அப்பா!'' என்றென் றழைத்தருளி அழுதருள.

உடனே தோணியப்பர் அம்மையாரோடு இடப வாகனத்தில் எழுந்தருளி, குழந்தையின் முன் தோன்றி, திருமுலைப்பாலுடன் சிவஞான இன்னமுதையும் குழைத்துப் பொற்கிண்ணத்தில் ஊட்டிடுக' என அம்மையாருக்குக் கட்டளையிட, அம்மையாரும் அவ்வாறே அருளினர். பின்னர் சிவபெருமான் உமாதேவியுடன் மறைந்தார். குழந்தையார் ஞானப்பாலை உண்டவுடன் எண்ணரிய பல ஞானங்களும் எய்தப் பெற்று இனிது விளங்கினர். சிவபாத விருதயர் நீராடி நியமங்களை முடித்துக் கரையேறியதும் பால் வழி நின்ற பாலகனைக் கண்டு 'உனக்குப் பாலூட்டியவர் யார்?' என்று சினந்து, ஒரு கோல் கொண்டு அதட்டிக் கேட்டார். அவ்வளவிற் குழந்தை, தமக்குப் பால் கொடுத்தவர் அம்மையப்பரே என்பதைச் சுட்டிக்காட்டி தாம் கண்ட திருக்கோலத்தைத் தன் தந்தையாருக்குக்காட்டிய பெருமையைச் சேக்கிழார் 73ஆம் பாடலில்

''எச்சில்மயங் கிடஉனக்கீ திட்டாரைக் காட்''டென்று
கைச்சிறிய தொருமாறு கொண்டோச்சக் காலெடுத்தே
அச்சிறிய பெருந்தகையார் ஆனந்தக் கண்துளிபெய்(து)
உச்சியினில் எடுத்தருளும் ஒருதிருக்கை விரற்சுட்டி.

என்றும்,

செம்மைபெற எடுத்ததிருத் ''தோடுடைய செவியன்''எனும்
மெய்ம்மைமொழித் திருப்பதிகம் பிரமபுரம் மேவினர்
தம்மைஅடை யாளங்க ளுடன்சாற்றித் தாதையார்க்(கு)
''எம்மையிது செய்த பிரான் இவனன்றே'' எனஇசைத்தார்

என 76ஆம் பாடலிலும் கூறியுள்ளார்.

இவ்வாறு தமது மூன்றுவது வயதிலேயே ஞானப் பாலை உண்டு ஞானம் பெற்ற திருஞான சம்பந்தர் திருக் கோலக்கா எனும் திருப்பதியை அடைந்து வலம் வந்து கையினல் தாளமிட்டு 'மடையில் வாளை' எனும் பதிகம் பாடுகையில் சிவபெருமான் திருவருளால் பஞ்சாட்சரம் வரையப் பெற்ற பொற்றாளம் அவர் கையில் வந்தது. அது கண்ட ஞானசம்பந்தர் இறைவன் திருவருளை வியந்து அத் திருப்பதிகத்தைப் பாடி முடித்தார். இன்னும் ஞானசம்பந் தர் புராணத்தில் பற்பல அற்புதங்களும், அரிய கருத்துக் களும் புதைந்து கிடக்கின்றன. நாம் எல்லாம் உய்வதற்கே சான்றோர்கள் பன்னிரு திருமுறைகளையும் அளித்துள்ளார் கள். அவற்றை நாம் நாள்தோறும் படித்துப் பயன்பெற வேண்டும். அதிலும் சமய தீக்கை, விசேட தீக்கை பெற்ற வர்கள் சிவபூசையில் பன்னிரு திருமுறைகளையும் ஓதி அம்பி கையின் பிள்ளைத் தமிழ், அபிராமி அந்தாதி ஆகியவை களையும் ஓதினல் அறியாமை என்னும் இருளில் சிக்கித் தவிக்கும் நிலையிலிருந்து நீங்கி ஒளிமிக்க தூயவாழ்க்கையை அடையும் வாய்ப்பைப் பெறுவார்கள்.

என் நித்திய விசேஷ சிவபூஜையில் எடுத்துக்கொண்ட திருக்குடமூக்கு ஆதிகும்பேசுவரரையும், மங்களாம்பிகை யையும் வணங்கி இக் கட்டுரையை முடித்துக்கொள் கின்றேன்.

---

## "ஆணவ நோய்க்கு ஓர் அருமருந்து"

(சைவப்புலவர் மு. திருஞானசம்பந்த பிள்ளை, இலங்கை)

விரிநீர் வியனுலகில் காணப்படும் உயிர் இனங்கள் யாவும் துன்ப நீக்கத்தையும் இன்பப் பேற்றையுமே வேண்டுகின்றன. ஓரறிவுயிர் முதல் ஆறறிவுடைய மக்கட்சமுதாயம்வரை துன்பியல் இல்லா இன்பியலையே எண்ணுகின்றனர். ஆயின் தோன்றும் உயிர்களிடம் சேர்ந்து தோன்றுவது துன்பமே. துன்பத்துடனே தோன்

றியவுயிர்கள் இன்பத்தை நாடி ஓடுகின்றன. ஓடும் உயிர்களுக்கு நில்லாதவற்றை நிலையினவென்றுணரும் புல்லறிவு ஏற்படுகின்றது. பலவிதக் காட்சிகள் தெரி கின்றன. கண்ணுக்குப் புலப்படும் காட்சிகள் சில. புலப்படாது, ஐம்பொறிகளினது அளவுபடாது இருப்பன பல. உலகும் உலகில் காணப்படும் உயிர் இனங்களும் கணத்துக்குக்கணம் மாறுவது தெரிகின்றது. நிற்பனவும் நடப்பனவும், நிலனும் நீரும், நெருப்பினொடு காற்று நெடுவான் ஆகியனவும் சுழற்சியுடையனவாகி மாற்றமடை கின்றன. நெருநல் உளன் இன்றில்லை யென்னும் பெருமை யுடைத்தாய இப்பிரபஞ்சமும் அதன்கண் காணப்படும் உயிரினங்களும் இவ்வாறு தோன்றி மறைவதன் காரணம் யாது? அப்படி ஒரு காரணம் இருப்பின் அது என்ன? அம்மாற்றம் நடைபெறச் செய்வது ஒன்றன் சக்தியா? என்றின்னோன்னவை பற்றி நம் ஆன்றோர் தம் நுண் மாண் நுழைபுலத்தால் நுணுகி ஆராய்ந்தனர். அங்ஙனம் ஆராய்ந்தவர்கள் சமயச் சான்றோர் எனப்பட்டனர். அன்னார் கண்ட உண்மைகள் சமய உண்மைகள் எனப் பட்டன.

மக்கள் வெவ்வேறு அறிவாற்றல் உள்ளவர்களாய் இருத்தலால் அவர்கள் கண்ட முடிபுகளும் வெவ்வேறாயும் சிலசமயம் முற்றுப்பெறாதனவாயும் இருந்தன. ஆயின் அவர்களுள் முடிந்த முடிபினைக் கண்டவர்கள் இல்லாது போகவில்லை. உண்மையின் உண்மையைக் கண்டவர்கள் வேதாந்தத் தெளிவாம் சைவசித்தாந்தத்தினர். இவர்களே உண்மையின் முடிவைக்கண்டவர். உண்மைப் பொருள் கண்ட சைவசித்தாந்திகள் முப்பொருள்கள் உண்மை யெனக் காட்டி அவை பதி, பசு, பாசம் என வோதுகின் றனர். இம்முப்பொருளுண்மை பற்றியும் அவற்றின் தொடர்புபற்றியும் சைவசித்தாந்திகள் கூறியது போல் பிறிதெவரும் பேசவில்லை. பதி எனப்படும் முதல்வனின் இலக்கணம், பசுவாகிய உயிர்களின் இலக்கணம், பாச மாகிய மலத்தினதிலக்கணம் என்பனவற்றையும் அவற் றின் தொடர்புபற்றியும் நன்கு ஆராய்ந்தனர். அவர்கள் கண்ட முடிவின்படி பசுவாகிய உயிர்கள் பாசமாகிய மலத்

துடன் அநாதியே சம்பந்தமுடையன. அவை அப்பாசத்தினின்று விடுபட்டு முதல்வனாகிய பதியை அடையவேண்டும். அப்படி அடைவதே அவற்றின் இலட்சியம். அவ்விலட்சியம் நிறைவேறவே இவ்வுலகம் நடைபெறுகிறது. அப்படி நடைபெறச் செய்பவன் பதியாகிய முதல்வனே என்பது பெறப்படும். இதனைக் கச்சியப்பசிவாசாரிய சுவாமிகள் பின்வருமாறு கூறுகின்றார்.

தன்னை நேரிலாப் பரம்பொருள் தனியுருக் கொண்ட
தென்னை காரண மென்றியே லைந்தொழி லியற்றி
முன்னை யாருயிர்ப் பாசங்கண் முழுவது மகற்றிப்
பின்னை வீடுபே றருளுவா னினைந்தபே ரருளே.

பல்லாருயிர் உணரும் பான்மை தெரியாத தன்மையைத்தந்த மலம் எனும் இவ்வழுக்கு அநாதியே அதனுடன் சம்பந்தப்பட்டது. இம்மலம் உயிர்க்கு உறுதியைத் தடைசெய்யும் நோய் என்பர். எனவே அந்நோய் நாடி நோய் முதல்நாடி, அது தணிக்கும் வாய்நாடி, வாய்ப்பச் சொல்லுவாம்.

மலம் என்று கூறுமிடத்து ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதானம் என்று ஐவகைப்படினும் அவற்றுள் முனைந்துநிற்பது முதற்கண் இருப்பதாகியஆணவமே. ஏனைய அதன்பாற்பட்டனவே. இவ்வாணவமே எல்லாவற்றிற்கும் மூலமாகவுள்ளது. எனவே அது மூலமலம் எனப்படும். இம்மூலமலம் பற்றிக் கூறவந்த சந்தான குரவர்களில் ஒருவராகிய அருணந்திசிவாசாரியார்,

'ஒன்றதாய் அநேகசக்தி யுடையதாய் உடனாய் ஆதி
யன்றதாய் ஆன்மா வின்தன் அறிவொடு தொழிலை
யார்த்து
நின்றுபோத் திருத்து வத்தை நிகழ்த்திச்செம் பினிற்
களிம்பேய்ந்
தென்றுமஞ் ஞானங் காட்டும் ஆணவம் இயைந்து நின்றே'

என்று கூறுகின்றார். கொற்றவன் குடியாராகிய உமாபதி சிவாசாரியார்,

'ஏகமாய்த் தங்கால வெல்லைகளின் மீளு
மெண்ணரிய சக்தியதா யிருளொளிர விருண்ட
மோகமாய்ச் செம்பிலுறு களிம்பேய்ந்து நித்த
மூலமல மாயறிவு முழுதினையு மறைக்கும்...'

என்றும்

"மோகமிக வுயிர்கடொறு முடனாய் நிற்கு
மூலவாணவம்"

என்றும்

"அன்றளவி யுள்ளொளியோ டாவியிடை யடக்கி
யின்றளவு மின்றதிருள்"

என்றும் கூறுகின்றமையும் மூலமலமாகிய ஆணவத்தின் இலக்கணத்தைக் கூறுகின்றன.

எண்ணிறந்த சக்திகளை யுடையதாய், பல்லாருயி ரொடும் புணர்ந்து செம்பிற்களிம்பு போல் அநாதியே அவ் வுயிர்களுடன் விரவி நிற்பதொன்றாய் உயிர்கள் கருவி கரணங்களோடு கூடாத கேவல நிலையிலும் அவ்வுயிர் களின் அறிவு, செயல், விழைவு என்பவற்றைச் சிறிதும் விளங்க வொட்டாது மறைப்பதாய் உயிரது சகலநிலையில் அவற்றின் அறிவு செயல்களை மேலோங்காவண்ணம் இழ்ப்படுத்துவதாய் போக நுகர்ச்சிக்கு வினைமுதலாகும் தன்மையை நிகழ்த்தி எஞ்ஞான்றும் உயிர்கட்கு அறியா மையைச் செய்துகொண்டிருக்கும் பொருளாயுள்ளதே ஆணவமலம் எனப்படும். மேலும் இவ்வாணவ மலம் ஒன்றேயாய் விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என் னும் மூவகை உயிர்ப் பாகுபாட்டிற் கேதுவாய் உயிர்க டோறும் தனித்தனி, வேறு வேருய் மறைந்து நின்று தத்தங்கால வெல்லையில் நீங்குவனவாகிய சத்திகள் பல வுடைத்தாய், உயிர்கள் கேவலாவத்தை, சகலாவத்தை, சுத்தாவத்தை என்னும் மூன்றவத்தைகளும் படுதற்கு மூலகாரணமாய், நித்தமாய், வியாபகமாய் வியாபகவுயிர் அணுத்தன்மைப் படுமாறு செய்தலின் ஆணவம் எனப் பெயர் பெற்றது.

இத்தன்மைத்தான ஆணவத்திற்குப் பரியாய நாமங் கள் பலவுள. அவற்றுள் உயிர்களுக்குப் பசுத்தன்மை

யைச் செய்தலின் பசுத்துவம் என்றும், பசுவின் அறிவை மூடலின் பசுநீகரம்என்றும் உயிரைச் சீவிக்கவொட்டாது தடுப்பதால் மிருத்தியு என்றும் மயங்கிக் கிடக்கச் செய்த லால் மூர்ச்சை என்றும் அசுத்தமாக்கலால் மலம் என்றும் இருள்போல் ஏனையவற்றைக் காட்டாதிருத்தலால் அஞ் சனம் என்றும் அறியாமையைச் செய்வதால் அவித்தை என்றும் மறைத்துக்கொண்டிருத்தலால் ஆவிருதி என்றும் அஞ்ஞானத்தைத் தருதலால் மோகம் என்றும் இன்னும் ஆவரணம், தமசு மூலம், சடம் என்றும் கூறப்படுவன குறிப்பிடத்தக்கன.

இம்மூலமலம் ஆன்மாக்களுடன் அன்றளவியுள் ளொளியோ டிடையடங்கியின்றளவும் நின்றபடியால் சகசமலம் எனப்படும். இது ஏனைய கன்மம் மாயை போன்று ஆகந்துகமலமன்று. சகசமாவதுகூடவுதித்தது. ஆகந்துகம் வந்து கூடியது. போதானந்தப் பொருளாம் மெய்காட்டும் மெய்கண்டார் இதனையுணர்த்தவே "சகச மலத்துணராது" என்று கூறியுள்ளார். உடலில் உயிர் எவ்வாறு கலந்திருக்கின்றதோ அங்ஙனமேஉயிர்க்குயிராய் நிற்கும் இறைவனுடைய பேரொளியோடு இவ்வாணவ மாகிய இருளும் அநாதியே சேர்ந்து இருக்கின்றது. ஆயின் உயிர் இறையாகிய பேரொளியோடுசேரும்போது ஞானத் தையும் இருளாகிய மலத்தோடு சேரும்போது அஞ்ஞா னத்தையும் அடைகின்றது. "ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றேயிடம் ஒன்றுமேலிடில் ஒன்று ஒளிக்கும்" என்று உமாபதிசிவம் கூறியதும் இதனையுணர்த்தியே. என்னை! இவ்வாணவம் உயிர்க்குச் சகசமெனில் அக்கினிக்கு வெம் மையும் புனலுக்குத் தண்மையும் போற் குணமாதலிற் குணமழியிற் குணியும் அழியுமல்லவா என்று கடாயினர்க்கு அற்றன்று செம்பிற்குக் களிம்பும் அரிசிக் குத்தவிடும் போற்குற்றமே அவற்றின் குணமன்று என்க. களிம்பும், தவிடும் நீங்கியவழி செம்பிற்கும் அரிசிக்கும் கேடில்லை. ஆங்கது போல் சகசமலமான ஆணவத்தை நீக்க உயிர்க்குக் கேடில்லை. மேலும் இவ்வாணவம் மாயையு மன்று மாய காரியமுமன்று, ஆன்மாவின் குணமுமன்று. ஏனெனில் சித்தான ஆன்மாவின் குணம் ஞானமாயிருத்த

லன்றிச் சடமாயிருத்தலியலாததினுலென்க. தீயின்குணம் வெம்மையாயிருக்குமே தவிரத் தண்மையாயிருப்பதில்லை. அதுபோல,

மூவகையெனக்கூறப்பட்ட ஆன்மாக்களுள் எம்போன்ற சகலர்க்கு இம்மலம் கருவிகூடிய சகலாவத்தையில் அராகம் முதலியகருவிகளிலே யாவேசித்து மோகம் மதம், இராகம், விஷாதம், சோஷம், வைசித்திரியம், அரிசம் என்னும் ஏழு வித குணபேதங்களை ஏற்படுத்தும். இவற்றுள் ஆன்மாவின் நல்லறிவு மயங்குவதே மோகம். உலகவின்பங்களையே மேலாக மதிக்கச்செய்வது மதம். உலகவின்ப நுகர்வுகளில் மிகுந்த ஆசையைத் தோற்றுவிப்பது இராகம். அநுபவித்த இன்பங்கள் திரும்பவும் கிடையாதபோது வருத்துவது விஷாதம். பற்றுள்ளவர்களிடமிருந்து நீங்க வேண்டியவிடத்து வருந்தி உடல்வாடச் செய்வதுசோஷம். தான் செய்யும் குற்றங்களைக் கடவுளின் பேரில் ஏற்றித் தன்னுடைய பெருமைகளை வியந்து பாராட்டி ஆச்சரியப்படச்செய்வதே வைசித்திரியம். உலகவின்பங்களை அநுபவிக்கும்போது தமக்கொருகுறையுமில்லையென நினைக்கச் செய்வதே அரிசம். இவற்றுள் இராகமாகிய அவாவுயிர்களை மிகவும் அலைத்து அல்லற்படுத்தும். அதனுலேயே மணிவாசகர் ''அவா வெள்ளக் கள்வனேனை'' என்றும் திருவள்ளுவர் ''அவாஎன்ப எல்லாவுயிர்க்கும் எஞ்ஞான்றும்தவாஅப் பிறப்பீனும்வித்து'' என்றும் கூறியுள்ளனர். சுருங்கக் கூறின் இவ்வாணவத்தின் குணம் இருவகைத்து. ஒன்று உயிர்களை உணராவண்ணம் தடுப்பது. ஏனையது உயிர்கள் கருவிகளைப் பெற்று உண்மை உணர முற்படும்போது அதன் அறிவை அகமுகப்படவொட்டாது புறவுலகைநோக்கிக் கீழே செலுத்துவிப்பது. முதலாவதைத் தடுக்கும் ஆற்றல் என்றும் இரண்டாவதை வீழ்க்கும் ஆற்றல் என்றும் கூறலாம்...திருவள்ளுவர் இவற்றை இருள், மருள் என்று குறிப்பிட்டுள்ளார்.

இவ்வகைத்தான இடரைச் செய்கின்ற இவ்வாணவ நோய் தீர மார்க்கம் யாது எனப் பார்ப்போமாயின் வழி தெற்றெனப் புலப்படும். யானைமுதல் எறும்பீருய ஊனமில் யோனியின் உள்வினை பிழைத்து மானுடப் பிறவி

யெடுத்த நாம் பிறந்த நோக்கையறிய வேண்டும். நாவலர் பெருமான் தமது இரண்டாம் பாலபாடத்தில் முதல்வசன மாக "இந்தச்சரீரம் நமக்குக்கிடைத்தது நாம் கடவுளை வணங்கி முத்தியின்பம் பெறும் பொருட்டேயாம்" என்று கூறியுள்ளார். மாயப்பிறப்பறுத்த வாகீசரும் "இனித்த முடைய எடுத்த பொற்பாதமுங்காணப் பெற்றால் மனித் தப்பிறவியும் வேண்டுவதே" என்றார். நோய் செய்து நோய் பிடித்திருக்கும் நாம் இந்நோயைத் தீர்க்கும் மருந்து யாதென ஆராய்ந்து கண்ட பெரியோர்கள் கூறியன வற்றை நினைவில் இருத்தல் வேண்டும். வள்ளுவன் தன்னை யுலகினுக்கே தந்து வான் புகழ்கொண்டநாம் அவன் காட் டிய வழியைப் பின்பற்றவேண்டும்.

"வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்கு
யாண்டு மிடும்பை யில"
"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"
"சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்"

எனும் குறள்கள் மூலம் திருவள்ளுவர் நோய்நீக்கும் மருந்து எது என்பதையும் அதை அடைவதே நமது ஒழுக் கம் என்பதையும் காட்டியுள்ளார். இறைவன் ஒருவனே இந்நோயைத் தீர்க்கக் கூடியவன். ஏனையவர் யாவரும் ஒருவாற்றால் நோயுள்ளவரே யாவர். எனவே தான் நாவுக் கரசர் "மூலநோய் தீர்க்கும் முதல்வன் கண்டாய்" என வும் மணிவாசகர் "மும்மைமலம் அறுவித்து முதலாய முதல்வன் தான்" எனவும் கூறியுள்ளார். மேலும் அரு ணந்திதேவநாயனார் "மருளுலா மலங்கடீர்க்கு மருந்திவை வைத்தியநாதன்" என்று கூறுமுகத்தாலும் எல்லாம்வல்ல இறைவனே தன் பேரருட்டன்மையால் மலத்தைத் தீர்ப் பன் என்பது பெறப்பட்டது.

இறைவன் உயிர்களுக்கு அவரவர் செய்த நல்வினை தீவினைப் பிரகாரம் அவ்வினைகளை ஒழிப்பதற்கு வாயிலா கத் தநு கரணபுவன போகங்களைக்கொடுத்து நுகர்வித்து ஆணவத்தின் வேகத்தைத் தடுக்கின்றான். உயிர்களைப் பிறப்பிறப்பில் விட்டுப் பேதகஞ் செய்வித்து நோயைக்

குணப்படுத்துகின்றான். உலகியல் வைத்தியன் மலம் போகப் பேதி கொடுத்துக் குணப்படுத்துவது போன்றே இறைவனும் உயிர்களுக்கு இன்பதுன்ப நுகர்ச்சியைக் கொடுத்து ஆணவ நோயைத் தீர்க்கின்றான். இப்படிப் பேதித்து நம்மை வளர்த்தெடுப்பது அவன்தன் ஆணையாகிய அருட்சக்தியே. எனவேதான் மணிவாசகர் "பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன் பாதத் திறம்பாடியாடு" என்கிறார். இருவினைகளும் அவற்றை அநுபவித்துத் தொலைக்க ஏற்பட்ட மாயைப்பிரபஞ்சமும் ஆணவ நோயை முற்றாகக் குணப்படுத்தா. அவை சிறிதளவு நோய்தீர உதவுவன. சூரிய ஒளியே இருளை முற்றாக நீக்குவதெனினும் அப்பேரொளி வருந் தனையும் சிறிது ஒளியைக் காட்டி உதவிச் சூரியனின் முற்றுந்தன்மையைக் காட்டும் விளக்குகள் போன்று இறைவன் அருள் கிடைக்கும் வரை இம்மாயையும் கன்மமும் ஆணவநோயை நீக்கச் சிறிதே உதவுகின்றன. இதனையே உமாபதி சிவாசாரியார் பின்வருமாறு கூறியுள்ளார்.

"விடிவாம் அளவும் விளக்கனைய மாயை
வடிவாதி கன்மத்து வந்து"

மேலே கூறியவற்றால் ஆணவ நோயைத் தீர்க்க இறைவன் அருளே வேண்டும் என்பது பெறப்படும். ஆயின் அவ்வருள் கிடைப்பது எங்ஙனம்? இறைவன் அருளே வடிவானவன். அன்பின் முதிர்ச்சியே அருள். அன்பு எங்கே காணப்படுகின்றதோ அங்கு அருள் உண்டு. அருள் எங்கு உண்டோ அங்கு இறைவன் உறைகின்றான். அன்பின் தலைநின்ற அருளுடையோரே நம் சமயச் சான்றோர்கள். நாயன்மார்களையும், சமய குரவர்களையும் அங்ஙிலைக்கு உயர்த்தியது எது? அன்பாகிய அருளேயன்றி வேறு என்ன? சமய குரவர்கள் நால்வரும் இறைவனிடம் அன்பு கொண்டு சரியை, கிரியை, யோகம் ஞானம் என்ற ஒழுக்க நெறிநின்றே வீடு வாழ்ந்தனர். நால்வகை நெறிகளிலும் முறை பிறழாது நிற்றலே அருள்பெற வழியாகும். நால்வகைப்படிகளுளும் ஒருவர்க்கு ஒரேயொன்றேற் படினும் ஏற்படும் அல்லது படிமுறையாகவும் அமையும். இவை முறையே அரும்பு, மலர், காய், கனிபோன்று படிமுறையே சென்று இன்பம்

பயப்பன. அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் முதலிய நால்வரும் முறையே சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற பாகத்தில் நின்றவர்கள். சரியையைப் பற்றி நாவுக்கரசர் அழகாகக் கூறியுள்ளார்.

" நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும் எம்பிரானுடைய கோவில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
சங்கரா சயபோற்றி போற்றி என்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதி யென்றும்
ஆரூரா எனறென்றே யலரு நில்லே.

சரியைத் தொண்டு பற்றிக் கூறியருளிய அப்பர் சுவாமி கள் திருநாமம் அஞ்செழுத்தும் செப்பவேண்டும் என்றும் இறைவன் புகழ் பாடவேண்டும் என்றும் ஒருமுறையா யினும் திருக்கோயில் சூழவேண்டும் என்றும், உண்பதன் முன் மலர் பறித்திட்டுண்ண வேண்டும் என்றும், அரு நோய்கள் கெடவெண்ணீறணிய வேண்டும் என்றும் கூறியுள்ளமை ஆணவ நோய் தீரச் செயத்தக்க காரியங் களே.

ஆலய வழிபாடு, ஐந்தெழுத்தோதல், அடியார் வழி பாடு ஆகியனவே மூல நோய் தீர்க்கும் அருளைப் பெறும் வழி. இவ்வழி நின்றோரே அந்நோய் தீர்த்த ஆன்றோரா வர். மலத்தைத் தடுத்து அதனால் அறிவு அறை போகாத வாறு காத்துக்கொள்வதற்கு வழி திருவைந்தெழுத்தோத லேயாகும். திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரும் அது பற்றியே "அந்தியுண் மந்திரம் ஐஞ்செழுத்துமே." என்றார். திருவைந்தெழுத்தோதிவரும் சிவஞானிகளுக்கு நிலத்தியல்பால் நீர் திரிந்தாங்கு இனத்தியல்பால் அறிவு திரியக்கூடும். எனவே சிவ வழிபாட்டில் நிற்பவன் தன் இனத்தோடு சேரவேண்டும். தன் இனம் என்பது சித்தத்தைச் சிவன்பாலே வைத்து செய்வினையே தவமாக ஆக்குபவர்கள்; அவர்களே மெய்யடியார்கள். சேரத் தக்க இனம். மெய்யடியார்கள் திருவேடப் பொலிவு மாட்சிமையுடைத்து, அவர்கள் திருநீறும் உருத்திராக்க முமே அணியப் பெற்றுள்ளவர். சிவனடியார் வேடம் எத்த கைத்து என்பதைச் சேக்கிழார்,

"சிந்தையிடை யறுவன்புந் திருமேனி தனிலசைவுங்
கந்தைமிகை யாங்கருத்தும் கையுழவா ரப்படையும்
வந்திழிகண் ணீர்மழையும் வடிவிற்பொலி திருநீறு
மந்தமிலாத் திருவேடத் தரசுமெதிர் வந்தணைய"
"கண்டகவு ணியக்கன்றும் கருத்திற் பரவு மெய்க்காதற்
றெண்டர்திரு வேடநேரே தோன்றியதென் றேதொழுது"

என்னும் அடிகளால் காட்டுவது மேற்கொள்ளத் தக்கது. சிவநேயச் செல்வர்களானோர் சிவபரம் பொருளிடத்தே அன்புடையவர்கள் எவர்களோ அவர்களோடு கூடி வாழ்வதே ஊட்டமாகும். அதுபற்றியே மணிவாசகர் "உடையாளுன்றன் நடுவிருக்கும் உடையாள் நடுவில் நீயிருத்தி அடியேன் நடுவில் இருவீரும் இருப்பதானல் அடியேன் உன் அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய்" என்று கூறினர்.

உலகியலில் வாழும் சிவஞானிகள், உலகின் சில இடங்களும், இடங்களின் நிகழ்பொருட்களும் தம் எண்ணத்தை ஈடேற்றத் தூண்டுகோலாய் உள்ளதை உணர்வர். அவ்விடங்களும் அவ்விடத்து நிகழ்ச்சிகளும் சிவஞானத்திற்கு அரண் செய்வன. அப்படி அரண் செய்வன சிவனடியார் வேடமும் சிவாலயமுமேயாகும். "அடியேன் அடிவண்ணன்" என்றபோது "அடியேன் அடிச்சோழன்" எனச் சொல்லியது சிவவேட நினைப்பல்லவா? சிவாலயத்திற் சென்று இது அவன் திருவுரு இவன் அவன் எனவே எங்களையாண்டு கொண்டிருப்பதை எண்ணவேண்டும். இறைவன் பாலில் நெய்போல் எவ்விடத்தும் வியாபகமாய் நிற்பினும் அவன் தயிரில் வெண்ணெய் போல் நிற்கும் இடம் மேலே குறிப்பிட்ட இருவிடங்களே. இவ்விருவிடங்களைக் காண்பதாலும் பழகுவதாலும் எம்மிடம் உள்ள காமம், வெகுளி, மயக்கம் ஆகிய மூலவழுக்குகள் நீங்கும். இவை நீங்கவே யான் எனது என்னும் செருக்கறும். அறவே பேரின்ப வீடு கிடைக்கும்.

'காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய்"
'யான் எனதென்னும் செருக்கறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்"

வள்ளுவர் நோய் இன்னதென்பதையும் அதை நீக்குமாற்றையும் தெள்ளுறத் தெளிவுபடுத்தியுள்ளார். சித்தாந்தச் செந்நெறியே வள்ளுவர் வகுத்த வாழ்க்கை நெறி. சைவ சித்தாந்த உண்மைகளை எல்லாம் குறளிலே ஆங்காங்குக் காணலாம். முக்கியமாகக் கடவுள் வாழ்த்து, நிலையாமை அறன்வலியுறுத்தல், மெய்யுணர்தல் என்பவற்றில் அதிகம் தெளிவுபடுத்தியிருப்பதை அவதானிக்கலாம்

யாம் இதுகாறும் கூறியவற்றால் உயிர்களிடத்து ஆணவம் என்னும் நோய் அநாதியே பற்றியிருப்பதென்பதும், அது உயிர்களை அறியாமையின் பாற்படுத்தி இறைவனையடைய வொட்டாது தடைசெய்கின்றதென்பதும், கட்டு நீக்கக்கருதிய உயிர்கள் வினையினைச்செய்து அதனை அனுபவிக்கவேண்டி மாயாப்பிரபஞ்சத்தோடு சேர்ந்து சிறிதளவு ஆணவ முனைப்புக் குறைகிறதென்பதும் – அவ்வாணவம் முற்றாக நீங்க இறையருள் வேண்டும் என்பதும், இவ்விறையருளைப்பெற திருவைந்தெழுத்தோதுதல் வேண்டும் என்பதும், அதில் நிலைபெறச் சிவனடியார் திருவேடமும் சிவாலயமும் துணைசெய்வன என்பதும், அப்படி இவ்விருவிடங்களிலும் பழக உயிர்காமம் வெகுளி மயக்கம் என்பவற்றுடன் கூடிய யான் எனது என்னும் செருக்கை அறுக்க ஆணவநோய் நீங்கும் என்பதும், நீங்கிய வழியே அத்துவிதமாகிய பேரின்பப் பெருவாழ்வு கிடைக்கும் என்பதும் பெறப்பட்டன.

மெய்கண்ட தேவநாயனார் திருவடி வாழ்க.

---

மதிப்புரை

# தொல்காப்பிய உரைப்பதிப்புக்கள்

1. எழுத்ததிகாரம் – நச்சினார்க்கினியம்;

2. சொல்லதிகாரம் - சேனாவரையம்: பதிப்பாசிரியர் திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் கு. சுந்தரமூர்த்தி. விலை ரூ. 6–50, ரூ. 8–00. இன்று நமக்குக் கிடைக்கும் தமிழ் இலக்கண நூல்களில் மிகவும் பழமையானது தொல்காப்பியம். இது எழுத்து, சொல்,

பொருள் என்ற மூன்று அதிகாரப் பாகுபாட்டினை உடையது. இதற்கு விருத்தியுரையெழுதிய பண்டைய ஆசிரியர்கள் பலர். எனினும், எழுத்து அதிகாரத்திற்குக் கிடைக்கும் உரைகள் இளம்பூரணம், நச்சினார்க்கினியம் என்னும் இரண்டே. நச்சினார்க்கினியம் முன்னர் நான்கு முறை பதிப்பிக்கப்பட்டுள்ளது. இது ஐந்தாவது பதிப்பாகும். இப்பதிப்பாசிரியர் உரை முழுமையும் பதிப்பித்ததோடு, 62 பக்கம் கொண்ட விளக்க உரை எழுதிச் சேர்த்திருக்கிறார். தமமுடைய பாடபோதனையால் பெற்ற அனுபவத்தில் கண்ட விளக்கங்களையெல்லாம் இங்குச் சேர்த்திருப்பது பாராட்டத்தக்கது. விளக்க உரையின் கருத்து, நச்சினார்க்கினியர் கருத்தைப் பிறவற்றோடு ஒப்புநோக்கிக் காட்டி மாணுக்கர் நன்கு உளங்கொள்ளுமாறு கூறுவதாகும். பொதுவாக பண்டைக்காலத்தில் தோன்றிய இலக்கண நூலை நன்கு விளங்க உணர்ந்து கொள்வதற்கு இவ்விளக்க உரை சிறந்த துணையாக நிற்கின்றது.

சொல்லதிகாரத்திற்கு உரை எழுதினர் அறுவர்—இளம் பூரணர், சேனவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார், கல்லாடர், பெயர் தெரியாத உரையாசிரியர் என்போர். பேராசிரியர் செய்ததாகச் சொல்லும் உரை கிடைத்திலது. இவ்வுரைகளை முன்னமே பலர் வெளியிட்டிருக்கிறார்கள். சேனவரையர் உரை தவிர ஏனையவை அனைத்தையும் இப் பதிப்பாசிரியரே பரிசோதித்துத் தனிப் பதிப்புக்களாக சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வாயிலாக வெளியிட்டிருந்தார். இப்போது எஞ்சியுள்ள சேனவரையர் உரையையும் தாமே தம் சொந்தச் செலவில் வெளியிட்டிருக்கிறார். வழக்கம்போல் இதற்கு விரிவான (54 பக்கம் கொண்ட) முன்னுரையையும், 130 பக்கம்கொண்ட விளக்கஉரையையும் சேர்த்திருக்கிறார். இவர் சொல்லதிகார உரைகள் அனைத்தையும் தாமே முயன்று பதிப்பித்த காரணத்தால் எல்லாவற்றிலும் உள்ள சிறப்புக்களை இங்குக் குறிப்பிட முடிகிறது. இதனல் இப்பதிப்பைப் பயன் படுத்துபவர்கள் ஏனைய உரைகளின் சிறப்புக்களையும் அறிந்தவர் ஆகிறார்கள்.

இரண்டு புத்தகங்களிலும் மாணுக்கருக்குப் பயன்படும் பொருட்டு, பல்கலைக் கழக வினுக்கள் தொகுத்தமைக்கப் பட்டிருக்கின்றன.

இவ்விரு பதிப்புக்களும் மாணுக்கருக்கும் ஆராய்ச்சி செய்ய விரும்புவோர்க்கும் பெரிதும் பயன்படத் தக்கவை. பல வேறு உரைகளையும் இவ்வாசிரியர் தாமே உற்றுநோக்கி அவற்றில் கண்ட நுட்பங்களை எடுத்துக் கூறும்போது, அவை ஆராய்ச்சிக்குச் சிறந்த பயன் தருவது உறுதி. இவர் தொல்காப்பியத்தையே நன்கு ஊன்றிப் பயின்றிருப்பதால் அதுபற்றித் திருத்தமாகவும், தெளிவாகவும் பேச முடிகிறது. தமிழுலகம் இப்பதிப்புக்களுக்காக ஆசிரியருக்கு நன்றி செலுத்தக் கடமைப் பட்டுள்ளது.

காகிதம், அச்சுக்கூலி முதலியவை மிகவும் மதிப்பு அதிகமாக ஏறியிருக்கின்ற இக்காலத்தில், இவர் சொந்தமாகவே இவ்விரு நூல்களையும் வெளியிட்டிருக்கிருர். மாணுக்கரும், ஆசிரியரும், தமிழறிவுடையோரும், புத்தகசாலைகளும் இந்நூல்களை அதிகமாக வாங்கி எஞ்சியுள்ள பொருளதிகார உரைகளையும் இவ்வாசிரியரே வெளியிடுமாறு ஊக்கமளிப்பார்களாக. —ஆசிரியர்.

---

திருஅம்பர்ப்புராணம் என்னும் நூல் ஒன்று வரப் பெற்ரும். இதனை இயற்றிய ஆசிரியர் திரிசிரபுரம் மகா வித்துவான் ஸ்ரீ மீனுட்சிசுந்தரம் பிள்ளை அவர்களாவர். இப்புராணம் நூறு ஆண்டுகளுக்கு முன்னரே பிள்ளையவர்களால் இயற்றப்பெற்று அரங்கேற்றப் பெற்றது. ஆனுல் இதுகாறும் அந்நூல் அச்சுவாகனம் ஏறவில்லை என்பது வருந்தத்தக்க செய்தியேயாகும். தற்போதாவது தமிழ் மக்கள் நற்பேறு காரணமாக மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலைய வெளியீடாக இது வெளிவந்துள்ளது குறித்து மகிழ்ச்சி. இந்நூல் வெளிவர திருஅம்பர்த் தேவத்தானத்தாரும் அறநிலைய ஆட்சித்துறையினரும் உதவியுள்ளனர் எனத் தெரிகிறது.

இந்நூல் 15 படலங்களையும் 1007 செய்யுட்களையும் கொண்டது. அண்மைக் காலத்து திரு. பிள்ளையவர்கள் போன்று புராணம் பாடும் புலவர்களைக் காண்பது அரிதாயுள்ளது. பிள்ளையவர்கள் பாடிய புராணங்கள் யாவும் பல்வேறு சிறப்புக்களையும் பெற்றிலங்குவது வெளிப்படை. அந்நிலையிலேயே இப்புராணமும் சிறந்த நயங்கள் அமைந்த பாக்களும் சித்திர கவி முதலியனவும் பெற்று மிளிர்கின்றது.

திரு அம்பர் சோமாசிமாற நாயனர் திருவவதாரத் தலமாகும். மேலும் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுரால் பாடப்பெற்ற பெருமையுடையதுமாகும். இப்புராணம் கற்பனை, அணிச்சிறப்பு, சித்தாந்தக் கருத்துகளாகிய எல்லா நலங்களையும் பெற்றுச் சிறந்து விளங்குகின்றது. இதற்கு மகாவித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் ஆராய்ச்சி முகவுரையும் வெளியீட்டாளர்கள் எழுதிய குறிப்புரை முதலியனவும் இன்னும் அணி செய்கின்றன. இதனைப் படிக்க விரும்புவோருக்கு அவர்கள் எளிதில் புரிந்து கொள்ளும் பொருட்டு எல்லா வாய்ப்புக்களையும் இந்நூலை வெளியிட்டோர் செய்து தந்துள்ளனர் என்று சுருங்கக் கூறலாம். வெளியிட்டால் போதுமா? அதனை அன்பர்கள் வாங்கிப் படித்துத் தமிழின்பம் துய்க்க வேண்டாவா? நம் சமயக் கருத்துக்களைத் தாமும் அறிவதுடன் பிறருக்கும் அறிவிக்க முயல வேண்டாவா? இந்நூல் வெளிவந்ததால் உண்டாம் பயனைப் பெற வேண்டாவா? யாவரும் வாங்கிப் படித்துப் பயன் பெறுவார்களாக. நல்ல அச்சு கண்கவர் கட்டோடு கூடியது. நூல், முகவுரை முதலிய யாவும் சேர்ந்து 300 பக்கங்களுக்கும் மேலாக விளங்குகிறது. விலை ரூ. 5–00. வேண்டுவோர் "டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் நூல் நிலையம்" திருவான்மியூர், சென்னை–41. என்ற முகவரிக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

(அம்பை)



திரிசிரபுரச் சைவ சித்தாந்த சபை சார்பில் 'சுந்தரமூர்த்தி நாயனார்' திருநாள் 25—7—1966-ல் கொண்டாடப்பெற்றது. இலஞ்சி திரு. அ. இ. முத்துக்குமாரசாமி (B.A. Hons) அவர்கள் சுந்தரர் என்ற தலைப்பில் சொற்பொழிவாற்றினார். செயலாளர் திரு. தி. சு. சிவப்பிரகாசம் நன்றி கூறினார்.

ஆர்க்காடு ஸ்ரீ கண்ணன் திருச்சபை ஆதரவில் ஸ்ரீ சுந்தரர் திருநாள் 24, 25—7—66 ஆம் நாள்களில் நிகழ்ந்தது திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்களும், ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகளும் முறையே இரு நாட்களிலும் தலைமை தாங்கினர். காஞ்சி சரோஜனியம்மையார், வித்துவான் மங்கையர்க்கரசியம்மையார், வித்துவான் ஜய செந்தில் நாதன் முதலியோர் இருநாள்களிலும் பேசினர். திரு. கா. மு. சுந்தர உடையார் நன்றி கூறினார்.

கோவை சேக்கிழார் திருக்கூட்டத்தார் வழக்கம் போல் இவ்யாண்டும் சேரநாட்டுத் திருப்பதியாய திருவஞ்சைக்களத்தில் ஸ்ரீசேரமான் பெருமாள் நாயனார், சுந்தரமூர்த்தி நாயனார் 32-வது ஆண்டு குருபூசைத் திருவிழாவை 24, 25, 26—7—66 ஆகிய மூன்று நாட்களிலும் சிறப்பாக நடத்தி வைத்தனர்.

திருவாலங்காட்டுப் பழையனூர் ஸ்ரீ சாட்சிபூதேஸ்வரர் மண்டலாபிஷேகப் பூர்த்தி விழா 25—7—66 திங்கட்கிழமையன்று சிறப்புற நிகழ்ந்தது. கனம் பக்தவத்சலம் முதலிய பல பெருமக்களும் கலந்து விழாவைச் சிறப்பித்தனர்.

# சமாஜத் தேர்வுகளின் பாடத் திட்டம்
## இளஞ் சைவப் புலவர்

1. இலக்கணம் : நன்னூல் காண்டிகை (ஆறுமுக நாவலர்) யாப்பருங் கலக்காரிகை, தண்டியலங்காரம் (பொதுவியல், பொருளணியியல் மட்டும்.)

2. இலக்கியம் : திருமுருகாற்றுப்படை, கந்தர் கலிவெண்பா, கந்தர் அநுபூதி, திருக்குறள், அறத்துப்பால் (பரிமேலழகர் உரையுடன்) சுந்தரர் தேவாரம் முழுவதும்.

3. சாத்திரம் : திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், உண்மை விளக்கம், திருவருட்பயன், கொடிக்கவி, வினா வெண்பா.

4. உரைநடை: சைவத்தின் சமரசம் (திரு. வி.க.), வாசீசர் அல்லது மெய்யுணர்தல் (சிவக் கவிமணி). பட்டினத்தார் வரலாறும் நூலாராய்ச்சியும், தாயுமானவர் வரலாறும் நூலாராய்ச்சியும் (கா. சு. பிள்ளை M.A., M.L.) பெரியபுராண வசனம், திருவிளையாடற் புராணவசனம் (ஆறுமுகநாவலர்),

## சைவப் புலவர்

1. இலக்கணம்: தொல்காப்பியம் எழுத்ததிகாரம் (நச்சினார்க்கினியம்) சொல்லதிகாரம் (சேனாவரையம்) பொருளதிகாரம் (இளம் பூரணம்) தருக்கசங்கிரகம் (சிவ ஞான முனிவர்.)

2 இலக்கியம்: பெரிய புராணம் (திருநாவுக்கரசு புராணம் முழுவதும்), சம்பந்தர் தேவாரம் முழுவதும் திருவாசகம் முழுவதும், ஒன்பதாந் திருமுறை முழுவதும்.

3. சாத்திரம்: சிவஞான போதச் சிற்றுரை, சிவ ஞான சித்தியர் சுபக்கம் (சிவஞான முனிவர் உரை), சிவப் பிரகாசம்; சங்கற்ப நிராகரணம்.

4. உரைநடை: சைவ சித்தாந்த ஞானபோதம் (மறைமலையடிகள்), சிவஞான சித்தியார் ஆராய்ச்சி (ந. சிவ குருநாத பிள்ளை) திருக்குறளின் உட்கிடை சைவ சித்தாந்தமே (க. வச்சிரவேல் முதலியார்), சிவஞான முனிவர் உரை நடை நூல்கள், பெரிய புராண சூசனம் (ஆறுமுகநாவலர்).

## சமாஜத் தேர்வு எழுதுவோர் கவனிக்க:

தேர்வு எழுத விரும்புவோர் பாடத் திட்டத்திற் குறித்துள்ள நூல்களை நன்கினிது படித்துப் பயிற்சி பெற்றிருத்தல் வேண்டும். முதல்வகுப்பில் தேர்ச்சிபெறும் இளைஞர்க்கு அதற்கென அன்பரொருவர் வழங்கிய மூலப் பொருளினின்று வரும் வருவாயைக்கொண்டு பரிசு வழங்கப் பெறும். இளஞ் சைவப் புலவர் தேர்வுக்கு ரூபாய் மூன்றும் சைவப் புலவர் தேர்வுக்கு ரூபாய் நான்கும் பதிவுக் கட்டணம் ஆகும். விண்ணப்பம் அனுப்பும் இறுதிநாள் 30—9—66. தேர்வு நவம்பர் மாதம் மூன்றும சனி ஞாயிற்றுக்கிழமைகளில் நடைபெறும்.

---

Printed at the Sengunthamithran Press, 33, Armenian St., Madras-1. | V. Sambandan. Edited by M. Arunachalam, M. A., and Published by S Satchidanandam Pillai, B. A., L. T., for the Saiva Siddhantha Maha Samajam, 13, East Mada St., Mylapore, Madras-4.